அன்போ டறனு மருளும் பழுத்தொளி
இற்றை ஞான்றினும் வெற்றுப் போர்செய
லெற்றிற் கோவென் னினிய மாந்தர்காள்?
ஆருயி ரோம்பலே போரினுஞ் சிறக்க;
பொறையுள மெங்கணும் பொருந்துக
அறைகடல் சூழிவ் வங்கண் ஞாலத்தே.

## ௩௬. எறும்பு

என்னே! எறும்பீர்! எழிற்சிற் றெறும்பீர்!
கொன்னே யிராமற் கூடி யுலாவுவீர்!
கால முணர்ந்துநீ ரேல வுணவினை
முன்னரே தேடி மொய்ம்புறச் சேர்த்து
நன்னரின் புற்று நாடொறும் வாழ்வீர்;
மக்களுட் பலர்நும் மாண்பினை யறியார்
தொக்கொரு வழியிற் றொழிலுஞ் செய்யார்
மடியராய் நாளு மடிவர், அந்தோ!
மாநுட ருடலின் மன்னிற் றழுக்கெனி
னோடிப் போந்துநீ ருறக்கடித் தவர்தமை
யறிவுறுத் தாயிடை யாருயி ரிழப்பீர்.
நும்மரு ளென்னே! நுவலுதற் பாற்றோ?
நல்லவ சாளரு நாண
வெல்லியும் பகலுநீ ரினிது முயல்விரே!

---

மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும் நேயம் என்பர் நச்சினார்க்கினியர். (தொல். பொருளியல் சூ. 53. நச்.)

அருள் - ஒன்றன் துயர் கண்டவிடத்துக் காரணமின்றித் தோன்றும் இரக்கம்; இதனை அளியென்றுங் கூறுப. அன்பு காரணமாக அருள் தோன்றும்.

cf. "அருளென்னு மன்பீன் குழவி." (திருக்குறள். 757.)

"தொடர்பு பற்றாதே வருத்தமுற்றார்மேற் செல்வதாய அருள்தொடர்பு பற்றிச் செல்லு மன்பு முதிர்ந்தவழி உளதாகலின் அதனை 'அன்பீன் குழவி' என்றனர் என்னும் பரிமேலழகர் உரை ஈண்டு நோக்கற்பாலது. அறம் - 'மநு முதலிய நூல்களுள் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்,' (திருக்குறள் - பரிமேலழகர் உரைப் பாயிரம்.)

பழுத்து - முதிர்ந்து. ஒளிர் விளங்கும். இற்றை ஞான்று - இந்தக் காலம் வெற்றுப்போர் - பயனற்ற போர். எற்றிற்கோ - எதன் பொருட்டோ. இனிய - அன்பு வாய்ந்த. மாந்தர் மக்கள். ஆருயிர் - பெறுதற்கரிய வுயிர். ஓம்பல் - பாதுகாத்தல். போரினும் - போர் செய்வதைக் காட்டிலும். சிறக்க - சிறப்பதாகுக; (வியங்கோள் முற்று). பொறையுளம் - பொறுமை பொருந்திய மனம். எங்கணும் - எவ்விடத்தும். பொருந்துக - நிலைபெறுவதாகுக. அறை கடல் - ஒலிக்கும் கடல்.

grace abound, is vain War waged ? May tenderness to life be deemed nobler than War ! May Peace fill all the quarters of this sounding-sea-surrounded Earth !

## XLIII. TO THE ANT

O Ant, so small and shapely, in unresting swarms for ever roving, timely you stock your store and live your life in peace and joy ! Of your greatness few are aware and few like you unite for common good ! Grown lazy, alas ! they perish.

When men's bodies gather dirt, you bite by way of caution, even at risk of being killed therefor. How great your grace, how unutterable !

You put to shame even benevolent Kings who work for their people's good. You toil bravely Night and day !

---

*அங்கண் ஞாலம் - அழகிய இடமகன்ற நிலவுலகம். ஞாலத்துச் சிறக்கப் பொருந்துக என முடிக்க.*

*சங. என்னே - வியப்பு, இரக்கம் இவற்றினடியாகக் கேட்பித்த பொருளில் வந்த இடைச்சொல். எறும்பீர் - எறும்புகளே (விளி). எழிற்சிற்றெறும்பீர் - அழகுள்ள சிறிய எறும்புகளே. கொன்னேயிராமல் - ஒரு தொழிலுமின்றிச் சும்மாவிராமல், கொன் - பயனின்மையைக் காட்டும் ஓரிடைச்சொல். (தொல். சொல். இடை. 6.). கூடி - கூட்டமாகச் சேர்ந்து. உலாவுவீர் - சஞ்சரிப்பீர். காலம் உணர்ந்து - உரிய காலம் இன்னதென்பதை அறிந்து. எல - பொருந்த.*

*முன்னரே - முன்னுடியே. நேடி - தேடி. மொய்ம்பு உற - வலிமை பொருந்த. நன்னர் நன்றாக. இன்புஉற்று - களிப்புற்று. நாள்தொறும் - எந்நாளும். மாண்பு - மாட்சி, பெருமைக்குணம். தொக்கு-கூடி. ஒரு வழியில் - ஒரு துறையில், மடியராய்- சோம்பேறிகளாய். நாளும் - தினமும். மடிவர். - அழிவார். அந்தோ - இரக்கக் குறிப்பு. மாநுடர் - மக்கள். உடலில் - தேகத்தில். அழுக்கு மன்னிற்றெனில் என மாறுக. மன்னுதல் - பொருந்துதல் ஓடிப்போந்து - விரைந்து சென்று. உறக் கடித்து - நன்றாகக் கடித்து. அவர்தமை - அவர்களை. அறிவுறுத்து - அழுக்கிருப்ப தைத் தெரிவித்து. ஆயிடை - அவ்விடத்தே. ஆருயிர் இழப்பீர் - பெறுதற்கரிய உயிரினை இழந்து போவீர். அழுக்குண்ட தன்மையை அறியாத மக்களுக்கு அதனை அறிவுறுத்தும் நற்செயல் புரிதற்கண் உயிர் போதலையும் பொருட்படுத்தாத பெரு மையினைக் கூறியது. எறும்பு கடித்தவுடன் கடியுண்டவர் கடித்த விடத்தைத் தேய்த்தலினால் எறும்பு நசுங்கியழிவதுண்மை. அஃது நற்செயல் புரிவதற்கண் உயிர் நீங்குவதாகக் கூறியது தற்குறிப்பேற்றவணி. நும் அருள் என்னே - நுமது கருணையை எங்ஙனம் புகழ்வோம் ? நுவலுதற்பாற்றோ - சொல்லுந் தரத்ததோ ? நல்லரசாளர் - நல்ல அரசாட்சியினைச் செய்யும் மன்னர். இவர் பிறர் நன்மைக்கு உழைப்பவர் ஆதலின் இங்ஙனம் எடுத்துக் கூறினர். இத்தகைய மன்னரைக் காட்டி னும் எறும்புகள் பிறர் நன்மைக் குழைப்பனவாதலின் 'நாண' என்றனர். எல்லி - இரவு. இனிது செவ்வையாக.*

**சுபம்**